இறந்த பட்சம் 25 லட்சம் பேராவது இருக்கலாம். வருடத்தில் 5 லட்சம் பேர் இக் கொடிய நோய்க்கு பலியாகிறார்கள். மக்கள் தொகைக்கு மிகவும் உபயோகமாக இருக்கக் கூடிய ~~[illegible]~~ வயதான 15 வயது முதல் 35 வயது உள்ளவர்களையே இந் நோய் பீடிக்கிறது. ஒரு க்ஷய ரோகி ஒரு நாளில் சுமார் வெளியிடும் நோய்க் கிருமிகளை வரிசையாய் வைத்தால் அவற்றின் மொத்த நீளம் 12 மைல் ஆகிறதென்று அமெரிக்க நிபுணர் டாக்டர் மாரிஸ் பாஸ்லெர்க் கூறுகிறார். நோய் அடைந்த வைத்தியசாலையிலிருந்து வெளியேறுகிறவர்களை பாதுகாக்கும் முறையில் வைத்திய பார்வையில் வைக்க வேண்டியது அவசியம். இதற்கென தாம்பரம் சானடோரியத்துக்கே "அம்பேத் நகர்" என்ற பெயரில் ஒரு குடியமைப்பு இருக்கிறது. நகர ஜனத்தொகை 5000க்கு ஒன்றும் கிராமாந்தர ஜனத்தொகை 100000க்கு ஒன்றும் ஆஸ்பத்திரிகள் தேவையென வைத்திய நிபுணர்கள் கூறுகிறார்கள். இந்த கணக்குப்படி பார்த்தால் இந்தியாவுக்கு 5 லட்சம் படுக்கை வசதிகளுடன் 4000 வைத்தியசாலை தேவை. தற்பொழுது இருப்பது 11000 படுக்கைகளுடன் கூடிய 120 வைத்தியசாலைகள்தான் இருக்கின்றன. சென்னை நகருக்கு 30 வைத்தியசாலைகள் வேண்டும். ஆனால் ஆறுதான் இருக்கின்றன. இதற்கு பி.ஸி.ஜி. வாக்ஸினேஷன் முக்கியமாக உபயோகிக்கிறார்கள். மதனபள்ளியிலும் ஒரு சானடோரியம் இருக்கிறது. பி.ஸி.ஜி. வாக்ஸினேஷன் சேத்பட்டுக்கு பின்னால் உள்ள "அசோக வாடிகாவில்" தினம் காலை 8.30 முதல் 10 மணி வரையிலும் எழும்பூர் ஜன ரோக வைத்தியசாலையில் காலை 7 மணி முதல் 10 மணி வரையிலும் "ட்யூபர்க்குளின் டெஸ்டு, பி.ஸி.ஜி. வாக்ஸினேஷனும் செய்யப்படுகின்றன *

* <u>அரிசி மகசூல் அபிவிருத்தி</u>:- உலகின் பல பகுதிகளில் மொத்தம் 8000 ரக அரிசிகள் விளைவிக்கப்படுகின்றன. இந்தியாவில் மட்டும் 3000 ரகங்கள் இருக்கின்றன. கட்டாக் ஆராய்ச்சி கழகத்தில் 190 ஏக்கர் நில வயல் திட்டத்தில் பரிசோதனார்த்தமாகப் பயிரிடப்படுகின்றன. இந்தியா நெல் அரிசி சராசரி விளைச்சல் ஏக்கருக்கு 750 பவுண்டாகும். ஆனால் ஜப்பான் 2500 பவுண்ட் மகசூலாகிறது. *

* <u>உருளைக் கிழங்கு ஆராய்ச்சி</u>: இக் கிழங்கு ஆராய்ச்சிக் கழகம் பாட்னாவில் இருக்கிறது. இந்தியாவில் பேராண்டுக்கு 9 பவுண்ட் கிழங்கு உணவுக்கு உபயோகமாகிறது. பரீக்ஷார்த்தமாக கோடைப்பருவம் ஒரு வெற்றி கண்டு கொள்ளப்பட்டிருக்கிறது. சென்னை ராஜ்யத்தில் சேலம், மதுரை, நீலகிரி பயிரிடப்படுகிறது.

<u>அமெரிக்கன் ரிப்போர்ட்டர்: 23.1.55</u>

உற்பத்தி சாதனங்களை அரசாங்கத்தினிடம் ஒப்படைத்துவிட வேண்டும் என்று கூறும் சோஷியலிஸக் கொள்கையை அமெரிக்கர்கள் பெரும்பான்மையோர் ஏற்க வரவேற்பதே இல்லை; அக் கொள்கையால் ரஷ்யாவில் நடந்திருப்பது அவர்களுக்குத் தெரியும். ஆனாலும் மக்களுக்கு நன்மை செய்ய உதவுமானால் சில தொழில்களை அரசாங்கம் கட்டுப்படுத்துவது பற்றியோ அவர்களுக்கு தடையில்லை. எந்தக் கொள்கையானாலும் நன்மை தருமானால் அதனைக் கடைபிடித்துப் பார்க்க அமெரிக்க நாடு ஒரு நாளும் தயங்கியதில்லை. எனினும் பழமையை வெட்டிவிட்டுப் புதுமையைக் கொள்ளும் தன்மை அதனிடம் கிடையாது. அதன் பழமையோ சுதந்திரம். மாகாண சுயாட்சி போட்டி ஏற்படாத மத்திய அரசாங்க ஐக்கியம், சமூக நீதி என்பவைகளாம். ***

"கம்யூனிஸ்ட் ஆக்கிரமிப்பைப் பொறுத்த வரையில் ஐரோப்பாவையும் முக்கியமாக மேற்கு ஐரோப்பாவையும், ஆசியாவையும் பிரித்து நோக்குதல் தவறு. உலகில் உள்ள சுதந்திர நாடுகள் யாவும் ஒன்றுக்கொன்று பிணைக்கப்பட்டுள்ளன என்பது நாள் ஆக ஆக நன்றாகத் துலங்குகிறது" *

<u>நிப்பன் டைம்ஸ்</u>

"அறிவு வளர்ச்சியை மட்டும் வற்புறுத்தி வந்தால் குழந்தையின் உணர்ச்சி வளர்ச்சிக்கு ஊறு உண்டாகலாம். உணர்ச்சிகள் வளர்ச்சியடைந்து செம்மைப்படுதல் மிக முக்கியமானது. உணர்ச்சியற்ற மனம் உலகுக்கு கெடுதியாகும். இந்த நாகரீக உலகில் நாஜிகளும் கம்யூனிஸ்டுகளும் செய்யும் படுகொலைச் செயல்கள் இதற்கு உதாரணங்களாகும்." ***

ஜெக்மன் அண்டேல்